# ॥ स्वात्मप्रकाशिका ॥

## ஸ்வாத்மப்ரகாசிகா

(1)

जगत्कारणमज्ञानमेकमेव चिदन्वितम् ।
एक एव मनस्साक्षी जानात्येवं जगत्त्रयम् ॥

ஜகத் காரண மஜ்ஞான மேகமேவ சிதன்விதம் ।
ஏக ஏவ மன: ஸாக்ஷீ ஜாநாத்யேவம் ஜகத்த்ரயம் ॥

சித் என்ற ஜ்ஞானா பாஸத்துடன் சேர்ந்த அஜ்ஞானம் ஒன்றே ஜகத்திற்கு காரணமென்றும், மனது என்ற ஒன்றே ஸாக்ஷீ என்றும் இந்த மூவுலகமும் அறிந்துள்ளது.

(2)

विवेकयुक्तबुद्ध्याऽहं जानाम्यात्मानमद्वयम् ।
तथाऽपि बन्धमोक्षादिव्यवहारः प्रतीयते ॥

விவேகயுக்த புத்யாऽஹம் ஜாநாம்யாத்மான மத்வயம் ।
ததாபி பந்தமோக்ஷா திவ்யவஹார: ப்ரதீயதே ॥

பகுத்தறியும் புத்தியுடன் இரண்டற்ற ஆத்மாவை அறிந்துள்ளேன்தான். எனினும் பந்தம், மோக்ஷம் என்ற பேச்சு தோன்றுவதும் இயல்பு.

(3)

विवर्तोऽपि प्रपञ्चो मे सत्यवद्भाति सर्वदा ।
इति संशयपाशेन बद्धोऽहं छिन्धि संशयम् ॥

விவர்தோऽபி ப்ரபஞ்சோ மே ஸத்யவத்பாதி ஸர்வதா ।
இதி ஸம்சய பாசேந பத்தோऽஹம் சிந்தி ஸம்சயம் ॥

பின்னும் பின்னும் சுழல்வதாக உள்ள இந்த ப்ரபஞ்சம் உண்மை போல் தோன்றுகிறதே. இந்த ஸம்சயம் என்ற கயிற்றால் பிணைக்கப்பட்டுள்ளேன். எனது இந்த ஸம்சய பந்தத்தைப் போக்கிவிட வேண்டுமே!

(4)

एवं शिष्यवचः श्रुत्वा गुरुराहोत्तरं स्फुटम् ।
नाज्ञानं न च बुद्धिश्च न जगन्न च साक्षिता ॥

ஏவம் சிஷ்யவச: ச்ருத்வா குருராஹோத்தரம் ஸ்புடம்।
நாஜ்ஞானம் நசபுத்திஸ்ச நஜகத் நச ஸாக்ஷிதா॥

மேலே கூறியவாறு சிஷ்யன் வார்த்தையைக் கேட்டு, குரு தெளிவாக பதில் கூறினார். அஜ்ஞானமோ, ஜ்ஞானபாஸமோ, உலகோ, ஸாக்ஷித்வமோ எதுவுமே ஆத்மா இல்லை.

(5)

बन्धमोक्षादयः सर्वे कृताः सत्येऽद्वये त्वयि ।
भातीत्युक्ते जगत्सर्व सद्रूपं ब्रह्म तद्भवेत् ॥

பந்தமோக்ஷாதய: ஸர்வே க்ருதா: ஸத்யேடத்வயே த்வயி।
பாதீ த்யுக்தே ஜகத்ஸர்வம் ஸத்ரூபம் ப்ரஹ்ம தத்பவேத்॥

உண்மையான இரண்டற்ற ஆத்மாவின்பால் பந்தம், மோக்ஷம், இவை சுமத்தப்பட்டுள்ளன. 'உலகம் பிரகாசிக்கிறது - என்ற பொழுது, அது ஸத்தான ப்ரஹ்மம் என்றாய் இருக்க வேண்டும்.

(6)

सर्पादौ रज्जुसत्तेव ब्रह्म सत्तैव केवलम् ।
प्रपञ्चाधाररूपेण वर्तते तज्जगन्नहि ॥

ஸர்பாதௌ ரஜ்ஜு ஸத்தேவ ப்ரஹ்மஸத்தைவகேவலம்।
ப்ரபஞ்சாதார ரூபேண வர்ததே தத்ஜகத் நஹி॥

ஸர்பம் முதலியவற்றில் கயிறு இருப்பதாக நினைப்பது போல் ப்ரபஞ்சத்தின் ஆதாரமாக மட்டும் உள்ளதேயன்றி அதுவே ப்ரஹ்மம் உள்ளது, உலகமல்ல என்று தெளிய வேண்டும்.

(7)

यथेक्षुमभिसंव्याप्य शर्करा वर्तते तथा ।
आश्चर्यब्रह्मरूपेण त्वं व्याप्तोऽसि जगत्रयम् ॥

யதேக்ஷுமபி ஸம் வ்யாப்ய சர்கரா வர்ததே யதா।
ஆஸ்சர்ய ப்ரஹ்மரூபேண த்வம் வ்யாப்தோஸி
ஜகத்ரயம்॥

*கரும்பு முழுதும் சர்க்கரை வியாபித்துள்ளது போல், ஆச்சர்யமான ப்ரஹ்ம வடிவில் ஆத்மா மூவுலகையும் வியாபித்துள்ளது.*

(8)

मरुभूमौ जलं सर्वं मरूभूमात्रमेव तत् ।
जगत्त्रयमिदं सर्वं चिन्मात्रं सुविचारतः ॥

மருபூமௌஜலம் ஸர்வம் மரூபூமாத்ரமேவ தத்।
ஜகத்த்ரயமிதம் ஸர்வம் சின்மாத்ரம் ஸுவிசாரத:॥

*பாலைவனத் தண்ணீர் என்பது மருபூமியின்றி வேறில்லை. அதுபோல் நன்கு ஆராய்ந்தால் உலகம் முழுதும் சித் - ஞான மயமானதே.*

(9)

ब्रह्मादिस्तम्बपर्यन्ताः प्राणिनस्त्वयि कल्पिताः ।
बुद्बुदादितरङ्गान्ता विकाराः सागरे यथा ॥

ப்ரஹ்மாதி ஸ்தம்ப பர்யந்தா: ப்ராணி நஸ்த்வயிகல்பிதா:।
புத்புதாதித ரங்காந்தா: விகாரா: ஸாகரேயதா॥

*சமுத்ரத்தில் நீர் குமிழி முதல் பெரும்அலை வரையான மாற்றமைப்புகள் போல் ஆத்மாவில் சுமத்தப்பட்டவையே பிரம்மன் முதல் துரும்பு வரையான ப்ராணிகள் எல்லாம்.*

(10)

तरङ्गत्वं ध्रुवं सिन्धुर्न वाच्छति यथा तथा।
विषयानन्दवाच्छा ते म सदानन्दरूपकः॥

தரங்கத்வம் த்ருவம்ஸிந்து: ந வாஞ்சதி யதா ததா।
விஷயான ந்தவாஞ்சா தே ந ஸதானந்த ரூபத:॥

கடல், அலையாவதை நிச்சயமாக விரும்புவதில்லையே அது போல், ஸதானந்த ரூபத்திலிருந்து உலகப் பொருளாய் இருக்கும் மகிழ்ச்சியாக இருக்க முடியாது.

(11)

पिष्टं व्याप्य गुडं यद्वन्माधुर्यं नहि वाञ्छति।
पूर्णानन्दो जद्व्याप्य तदानन्दं न वाञ्छति॥

பிஷ்டம் வ்யாப்யகுடம் யத்வத் மாதுர்யம் நஹிவாஞ்சதி।
பூர்ணானந்தோ ஜகத்வ்யாப்ய ததானந்தம் ந வாஞ்சதி॥

வெல்லம், மாவு முழுதும் பரவியபின் தனியாக இனிமையை எதிர்நோக்காததுபோல் முழு ஆனந்தமும் உலகை வியாபித்தபின் உலகானந்தத்தை எதிர்பார்ப்பதில்லை.

(12)

दारिद्र्याशा यथा नास्ति सम्पन्नस्य तथा तव।
ब्रह्मानन्दनिमग्नस्य विषयाशा न सम्भवेत्॥

தாரித்ர்யாசா யதா நாஸ்தி ஸம்பந்நஸ்ய ததாதவ।
ப்ரஹ்மாநந்த நிமக்னஸ்ய விஷயாசா நஸம்பவேத்॥

சொத்து, சுதந்திரம் உள்ளவனுக்கு ஏழ்மைக்குட்படும் நோக்கம் துளி கூட இருக்காதல்லவா! அதுபோல் ப்ரஹ்மா னந்தத்தில் மூழ்கி திளைத்தவனுக்கு உலக விஷய சுகங்களில் ஆசை இருக்க வாய்ப்பே இல்லை.

(13)

विषं दृष्ट्वाऽमृतं दृष्ट्वा विषं त्यजति बुद्धिमान् ।
आत्मान मपि दृष्ट्वा त्वं त्यजानात्मानमादरात् ॥

விஷம் த்ருஷ்ட்வாऽம்ருதம் த்ருஷ்ட்வா விஷம்
த்ய ஜதிபுத்திமான்।
ஆத்மா நமபி த்ருஷ்ட்வா த்வம் த்யஜாநாத்மாந மாதராத்॥

விஷத்தையும், அம்ருதத்தையும் நேரில் கண்ணால் கண்டபின் விஷத்தை விட்டு விடுவான் புத்திசாலி. அதுபோல் ஆத்மாவை நேரில் கண்டபின் அநாத்மாவான தேஹாதிகளை விடவேண்டுமே!

(14)

घटावभासको भानुर्घटनाशे न नश्यति ।
देहावभासकः साक्षी देहनाशे न नश्यति ॥

கடாவபாஸகோ பானு: கடநாசே ந நச்யதி।
தேஹாவபாஸக: ஸாக்ஷீ தேஹநாசே ந நச்யதி॥

குடத்தை பிரகாசப்படுத்தும் சூர்யன், கடம் தொலைந்தாலும் மறைவதில்லை. அதுபோல் தேஹத்தை புலப்படச்செய்த சாக்ஷீயாக இருந்த ஆத்மா தேகம் அழியும்பொழுது அழிவதில்லை.

(15)

निराकारं जगत्सर्वं निर्मलं सच्चिदात्मकम् ।
द्वैताभावात्कथं कस्माद्भयं पूर्णस्य ते वद ॥

நிராகாரம் ஜகத்ஸர்வம் நிர்மலம் ஸச்சிதாத்மகம்।
த்வைதாபாவாத் கதம் கஸ்மாத் பயம்பூர்ணஸ்ய தே வத॥

ஆகாரம் (வடிவம்) அற்ற உலகம் தூய ஸத்சித் ஸ்வரூபமாக ஆவதால் இரண்டான நிலையும் கெடுவதால், பூர்ணமான ஆத்மாவுக்கு எதிலிருந்து பயம் உண்டாக முடியும்? (பயம் இல்லை)

(16)

ब्रह्मादिकं जगत्सर्वं त्वय्यानन्दे प्रकल्पितम् ।
त्वय्येव लीनं हि जगत्त्वं कथं लीयसे वद ॥

ப்ரஹ்மாதிகம் ஜகத்ஸர்வம் த்வய்யானந்தே ப்ரகல்பிதம்।
த்வய்யேவ லீநம் ஹிஜகத் த்வம் கதம் லீயஸே வத ॥

ப்ரஹ்மா முதலிய உலகமனைத்தும் ஆனந்த ஸ்வரூபியான ஆத்மாவில் கற்பிக்கப்பட்டதே. உலகம் ஆத்மாவில் லயத்தை அடையும்பொழுது, ஆத்மா எதில் எப்படி லயத்தையடையும்?

(17)

नहि प्रपञ्चो न हि भूतजातं
न चेन्द्रियं प्राणगणो न देहः ।
न बुद्धिचित्तं न मनो न कर्ता
ब्रह्मैव सत्यं परमात्मरूपम् ॥

நஹிப்ரபஞ்சோ ந ஹி பூதஜாதம்
நசேந்த்ரியம் ப்ராணகணோ நதேஹ:
ந புத்திசித்தம் ந மநோ நகர்தா
ப்ரஹ்மைவ ஸத்யம் பரமாத்மரூபம் ॥

இந்த ப்ரபஞ்சமோ, பஞ்சபூதங்களோ, இந்த்ரியங்களோ, பிராண - அபானாதிக் கூட்டமோ, தேஹமோ, புத்தி, சித்தம் ஆகியவையும் கர்தாவான அஹங்காரமும் உண்மை இல்ல; ப்ரஹ்மம் ஒன்றுதான் ஸத்யம். அது பரமாத்ம ரூபமானது.

(18)

सर्वं सुखं विद्धि सुदुःखनाशात्
सर्वं च सद्रूपमसत्यनाशात् ।
चिद्रूप मेवं प्रतिभानयुक्तं
तस्मादखण्डं परात्मरूपम् ॥

ஸர்வம் ஸுகம் வித்திஸுது: கநாசாத்
ஸர்வம்ச ஸத்ரூப மஸத்ய நாசாத்।
சித்ரூபமேவம் ப்ரதிபானயுக்தம்
தஸ்மாத கண்டம் பரமாத்மரூபம்॥

துக்கமெல்லாம் தொலைந்து விட்டதால் எல்லாமே ஆனந்த மயம் என்று எண். அதே போல் பொய்யானதெல்லாம் அழிந்து விட்டதால் இனி எல்லாம் 'ஸத்' என நினை. எல்லாம் இப்படி தோன்றலுக்கு இடமளிக்கும் சித்ரூபம் ஆகிவிட்டதால் பரமாத்ம தர்சனம் முழுமையாக உள்ளது.

(19)

चिदेव देहस्तु चिदेव लोकाः
चिदेव भूतानि चिदिन्द्रियाणि ।
कर्ता चिदन्तःकरणं चिदेव
चिदेव सत्यं परमात्मरूपम् ॥

சிதேவ தேஹஸ்து சிதேவ லோகா:
சிதேவ பூதாநி சிதிந்த்ரியாணி।
கர்தாசித் அந்த: கரணம் சிதேவ
சிதேவ ஸத்யம் பரமார்த்தரூபம்॥

இந்த தேஹமும், உலகங்களும், பூதங்களும், இந்த்ரியங்களும், கர்தாவும், அந்த: கரணமும் இப்படி எல்லாமே சித் - என்ற ஞானமே. அதுவே ஸத்யம். அதுவே உண்மையான உருவம் கொண்டது.

(20)

न मे बन्धो न मे मुक्तिर्न मे शास्त्रं न मे गुरुः ।
मायामात्रविलासोहि मायाऽतीतोऽहमद्वयः ॥

நமே பந்தோ நமேமுக்தி: நமே சாஸ்த்ரம் நமேகுரு:।
மாயாமாத் ரவிலாஸோ ஹி மாயாதீதோऽஹ மத்வய: ॥

எனக்கு (ஆத்மாவுக்கு) பந்தமும் இல்லை; முக்தியு மில்லை. சாஸ்திரமும் இல்லை, குருவும் இல்லை. மாயையாகிய வெளிப்புழக்கத்தை உடையது. உண்மையில் ஆத்மா மாயையைக் கடந்து, வேறு ஒன்றில்லையென ஆனது.

(21)

राज्यं करोतु विज्ञानी भिक्षामटतु निर्भयः ।
दोषैर्नलिप्यते शुद्धः पद्मपत्रमिवाम्भसा ॥

ராஜ்யம் கரோது விஜ்ஞாநீ பிக்ஷாமடது நிர்பய:।
தோஷைர்ந லிப்யதே சுத்த: பத்மபத்ரமி வாம்பஸா ॥

ஆத்மாவைப் பற்றி விசேஷ ஞானமுள்ளவன் அரசாண் டாலும், அல்லது பயமேதுமின்றி பிச்சையெடுத்தாலும் அவனை எந்த தோஷமும் அணுகாது, தண்ணீர் தாமரை இலையில் ஒட்டுவதில்லையே அதுபோல்.

(22)

पुण्यानि पापकर्माणि स्वप्नगानि नजाग्रति ।
एवं जाग्रत्पुण्यपापकर्माणि न हि मे प्रभोः ॥

புண்யாநி பாபகர்மாணி ஸ்வப்நகாநி நஜாக்தி।
ஏவம் ஜாக்ரத் புண்யபாப கர்மாணி நஹிமே ப்ரபோ: ॥

ஸ்வப் நாவஸ்தையில் உண்டான புண்ய, பாப கர்மாக்கள் ஜாக்ரதவஸ்தையில் இல்லையாவதுபோல், ஜாக்ரதவஸ்தையில் நிகழும் புண்யபாப கர்மாக்கள் எல்லாம் வல்ல ஆத்மாவுக்கு இல்லை.

(23)

कायःकरोतु कर्माणि वृथा वागुच्यतामिह ।
राज्यं ध्यायतु वा बुद्धिः पूर्णस्य मम का क्षतिः ॥

காய: கரோது கர்மாணி வ்ருதாவாகுச்யுதாமிஹ।
ராஜ்யம் த்யாயது வா புத்தி: பூர்ணஸ்ய மம கா க்ஷதி:॥

உடல் கர்மாக்களை செய்து கொண்டே இருக்கட்டும், வாக் எதையாவது வீணாக சொல்லிக்கொண்டே இருக்கட்டும். புத்தி அரசியலைப்பற்றி நினைத்துக் கொண்டும் இருக்கட்டுமே. எப்பொழுதும் நிரம்பியுள்ள ஆத்மாவுக்கு ஏது தாழ்ச்சி?

(24)

प्राणाश्चरन्तु तद्धर्मैः कामैर्वा हन्यतां मनः ।
आनन्दामृतपूर्णस्य मम दुःखं कथं भवेत् ॥

ப்ராணாஸ்சரந்து தத்தர்மை: காமைர்வாஹந்யதாம் மந:।
ஆனந்தாம்ருத பூர்ணஸ்ய மமது: கம் கதம் பவேத்॥

பிராணன்கள் அதனதன் இயல்புகளை விட்டு விலகினாலும், மனது காமங்களால் சீரழிக்கப்பட்டாலும் சரி, ஆனந்தாம்ருதம் நிரம்பிய ஆத்மாவுக்கு துன்பம் உண்டாகப் போவதில்லை.

(25)

आनन्दाम्बुधिमग्नोऽसौ देही तत्र न दृश्यते ।
लवणं जलमध्यस्थं यथा तत्र लयं गतम् ॥

ஆனந்தாம்புதி மக்நோऽஸௌ தேஹீதத்ர ந த்ருசய்தே।
லவணம் ஜல்மத்யஸ்தம் யதா தத்ரலயம் கதம்॥

ஆனந்தாம்ருதக் கடலில் மூழ்கித் திளைத்த ஆத்மா அங்கு காணவில்லை. தண்ணீரினுள் போடப்பட்ட உப்பு அங்கேயே கரைந்து லயித்துப் போவதுபோல்.

(26)

इन्द्रियाणि मनः प्राणा अहङ्कारः परस्परम् ।
जाड्यसङ्गतिमुत्सृज्य मग्ना मयिचिदर्णवे ॥

இந்த்ரியாணி மந: ப்ராணா அஹங்கார: பரஸ்பரம்।
ஜாட்யஸங்கதி முத்ஸ்ருஜ்ய மக்நா மயிசிதர்ணவே॥

இந்த்ரியங்களும், மனமும், பிராணன்களும், அஹாங் காரமும், ஒன்றுக்கொன்று அஜ்ஞான ஸம்பந்தத்தை விட்டுவிட்டு சித் என்ற ஞானக்கடலில் கரைந்தன.

(27)

आत्मानमञ्जसावेद्मि त्वज्ञानं प्रपलायितम् ।
कर्तृत्वमद्य मे नष्टं कर्तव्यं वापि न क्वचित् ॥

ஆத்மான மஞ்ஜஸா வேத்மி த்வஜ்ஞானம் ப்ரபலாயிதம்।
கந்த்ருத்வ மத்யமே தக்ஷ்டம் கா்தவ்யம்வாபி நக்வசித்॥

ஆத்மாவை சட்டென கண்ட பொழுது அஜ்ஞானம் போன இடம் தெரியவில்லை. ஆத்மாவுக்கு கர்த்ருவத்வமும் இல்லை. செய்யவேண்டியதொன்றுமில்லை அதற்கு.

(28)

चिदमृतसुखराशौ चित्तफेनं विलीनं
क्षयमधिगत एवं वृत्तिचञ्चत्तरङ्गः ।
स्तिमितसुखसमुद्रो निर्विचेष्टः सुपूर्णः
कथमिह मम दुःखं सर्वदैकोऽहमस्मि ॥

சிதம்ருதஸுகராசெ சித்தபேனம் விலீநம்
க்ஷயமதிகத ஏவம் வ்ருத்தி சஞ்சத்த்ரங்க:।
ஸ்திமிதஸுக ஸமுத்ரோ நிர்விசேஷ்ட: ஸுபூர்ண:
கதமிஹ மம து:கம் ஸர்வ தைகோऽஹமஸ்மி॥

ஜ்ஞானாம்ருதக் கடலில் சித்தமாகிய நுரை மறைந்து போயிற்று. அதன் செயல்பாடுகளாகிய அலைகளும் அங்கே ஒடுங்கின. ஆகவே, அசையாத அந்த ஆனந்த வெள்ளக்கடல் செயலிழந்து, நிரம்பி இருக்கும்போது ஆத்மாவுக்கு எந்த துன்பமும் இல்லை. எப்பொழுதும் ஒரே ஒருவராக அது மிளிர்கிறது.

(29)

आनन्दरूपोऽहमखण्डबोध:
परात्परोऽहं घनचित्प्रकाश: ।
मेघा यथा व्योम न हि स्पृशन्ति
संसार दु:खानि न मां स्पृशन्ति ॥

ஆனந்தரூபோऽஹமகண்டபோத:
பராத்பரோऽஹம் கனசித்ப்ரகாச:।
மேகா யதா வ்யோம நஹி ஸ்ப்ருசந்தி
ஸம்ஸார து:காநி ந மாம் ஸ்ப்ருசந்தி॥

ஆனந்தமயமான ஆத்மா பேரறிவேயானது. பரத்திற்கும் பரமானது, திரண்ட அறிவொளியானது. மேகங்கள் ஆகாயத்தை யளாவி இருந்தாலும் அதை தொடுவதில்லை. அது போல் சம்சார துக்கங்கள் ஆத்மாவை தொடுவதில்லை.

(30)

अस्थिमांस पुरीषान्त्रचर्मलोमसमन्वित: ।
अन्नाद:स्थूलदेह: स्यादतोऽहं शुद्धचिद्घन: ॥

அஸ்திமாம்ஸ புரீஷாந்த்ர சர்ம லோம ஸமந்வித:।
அந்நாத: ஸ்தூல தேஹ: ஸ்யாத் அதோऽஹம்
சுத்தசித்கன:॥

ஸ்தூலதேகம் வேண்டுமானால் எலும்பு, மாம்ஸம், கழிவு, குடல், தோல், உரோமம் முதலியன கொண்டும் அன்னம் உண்பதாயும் இருக்கலாம். ஆனால் ஆத்மா தூய அறிவே நிரம்பப்பெற்றது.

(31)

स्थूलदेहाश्रिता एते स्थूलाद्भिन्नस्य मे नहि ।
लिङ्गं जडात्मकं नाहं चित्स्वरूपोऽहमद्वय: ॥

ஸ்தூல தேஹாச்ரிதா ஏதே ஸ்தூலாத்பின்னஸ்யமே நஹி।
லிங்கம் ஜடாத்மகம் நாஹம் சித்ஸ்வரூபோऽஹமத்வய: ॥

இவையெல்லாம் ஸ்தூல தேஹத்தைச் சார்ந்தவை. ஸ்தூலத்திலிருந்து வேறுபட்ட ஆத்மாவுக்கு இவை இல்லை. ஜடஸ்வ ரூபமான லிங்க சரீரமும் ஆத்மாவாகாது. ஏனெனில் ஆத்மா அத்வயமான அறிவேயுருவானது.

(32)

क्षुत्पिपासान्ध्यबाधिर्यकामक्रोधादयोऽखिलाः ।
लिङ्गदेहाश्रिता ह्येते नैवालिङ्गस्य मे विभोः ॥

க்ஷுத்பிபாபாஸாந்த்ய பாதிர்ய காமக்ரோதாதயோகிலா:।
லிங்க தேஹாச்ரிதா ஹ்யேதே நைவாலிங்கஸ்யமே
விபோ: ॥

பசி, தாகம், கண்காட்சியற்ற நிலை, காதுகேளாத நிலை, காமம், க்ரோதம் முதலியன யாவும் லிங்க தேகத்தைச் சார்ந்தவையே. லிங்கமாக இல்லாத எங்குமுள்ள ஆத்மாவுக்கு இவை இல்லை.

(33)

अनाद्यज्ञानमेवात्र कारणं देह उच्यते ।
नाहं कारणदेहोऽपि स्वप्रकाशो निरञ्जनः ॥

அநாத்யஜ்ஞானமேவாத்ர காரணம் தேஹ உச்யதே।
நாஹம் காரணதேஹோऽபி ஸ்வப்ரகாசோ நிரஞ்ஜன: ॥

காரணதேஹம் என்பது அநாதியான அஜ்ஞானமே. ஆகவே அந்த காரணதேஹமும் ஆத்மா ஆகாது. ஏனெனில் ஆத்மா ஸ்வயம் ப்ரகாசமானது. வெளிப்புற உபாதிகளைக் கொள்ளாதது

(34)

जडत्वप्रियमोदत्वधर्माः कारणदेहगाः ।
न सन्ति मम नित्यस्य निर्विकारस्वरूपिणः ।

ஜடத்வ ப்ரிய மோதத்வதர்மா: காரணதேஹகா:
நஸந்தி மம நித்யஸ்ய நிர்விகார ஸ்வரூபிண:॥

ஜடத்வம், ப்ரியத்வம், மோதத்வம் என்ற இயல்புகளும் காரண தேகத்தைச் சார்ந்தவை. நித்யமான, நிர்விகாரமான ஆத்மாவுக்கு அந்த தர்மங்கள் இல்லையே.

(35)

जीवाद्भिन्नः परेशोऽस्ति परेशत्वं कुतस्तव ।
इत्यज्ञजनसंवादविचारः क्रियतेऽधुना ॥

ஜீவாத் பிந்ந: பரேசோऽஸ்தி பரேசத்வம் குதஸ்தவ।
இத்ய ஜ்ஞஜன ஸம்வாதவிசார: க்ரியதேऽதுநா॥

ஜீவாத்மாவைக்காட்டிலும் வேறான பரமாத்மா உண்டே! அந்த பரமாத்மத்வம் ஜீவாத்மாவுக்கு கிடையாதே! என்று ஒருசில மூடர்களின் வாதத்தின்மேல் இப்பொழுது ஆய்வு செய்யப்படும்.

(36)

अधिष्ठानं चिदाभासो बुद्धिरेतत्त्रयंयदा ।
अज्ञानादेकवद्भाति जीव इत्युच्यते तदा ॥

அதிஷ்டானம், சிதாபாஸம், புத்தி - ஆகிய இம்மூன்றும் எப்பொழுது அறிவின்மை காரணமாக ஒன்றுபோல தோன்றுகிறதோ அப்பொழுது ஜீவாத்மா எனப்படுகிறது.

(37)

अधिष्ठानं न जीवः स्यात्प्रत्येकंनिर्विकारतः ।
अवस्तु स्याच्चिदाभासो नास्ति तस्य च जीवता ॥

அதிஷ்டானம் நஜீவ: ஸ்யாத் ப்ரத்யேகம் நிர்விகாரத:।
அவஸ்து ஸ்யாத் சிதாபாஸோ நாஸ்தி தஸ்யச ஜீவதா॥

அதிஷ்டானம் ஜீவாத்மாவாக ஆகாது ஏனெனில் சிறப்பாக விகாரமில்லாதது என்ற காரணத்தால். சிதாபாஸமும் ஜீவாத்ம தன்மையுடையதில்லை. ஏனெனில் சிதாபாஸம் என்பது வஸ்துவில்லை!

(38)

प्रत्येकं जीवता नास्ति बुद्धेरपि जडत्वतः ।
जीव आभासकूटस्थबुद्धित्रयमतो भवेत् ॥

ப்ரத்யேகம் ஜீவதா நாஸ்தி புத்தேரபி ஜடத்வத:।
ஜீவ ஆபாஸகூடஸ் தபுத்தித்ரய மதோ பவேத்॥

புத்தியும் தனித்த முறையில் ஜீவாத்மாவாக ஆகாது. ஏனெனில் புத்திஜடமெனத் திகழ்வதால். ஆகவே, சிதாபாஸம் அதிஷ்டானம் புத்தி ஆகிய மூன்றும் சேர்ந்த நிலையே ஜீவாத்மா.

(39)

मायाऽऽभासो विशुद्धात्मा त्रयतेतन्महेश्वरः ।
मायाभासोऽप्यवस्तुत्वात्प्रत्येकं नेश्वरो भवेत् ॥

மாயா஽஽பாஸோ விசுத்தாத்மா த்ரய மேதந்மஹேச் ர:।
மாயாபாஸோ஽ப்யவஸ்துத்வாத் ப்ரத்யேகம் நேச்வரோ
பவேத்।

மாயை, மாயாபாஸம், விசுத்தாத்மா ஆகிய இம் மூன்றுட பரமாத்மாவாக ஆகும். மாயாபாஸம் வஸ்துவாக இல்லை யாதலால் தனித்து பரமாத்மா என்று சொல்வதற்கில்லை.

(40)

पूर्णत्वान्निर्विकारत्वाद्विशुद्धात्मा न चेश्वरः ।
जडत्वहेतोर्मायायामीश्वरत्वंनु दुर्घटम् ॥

பூர்ணத்வாத் நிர்விகாரத்வாத் விசுத்தாத்மா ந சேச்வர:।
ஜடத்வஹேதோ: மாயாயாம் ஈச்வரத்வம் நு துர்கடம்॥

விசுத்தாத்மா என்பது பரமாத்மாவாகாது ஏனெனில் அ நிரம்பியுள்ளதாலும், விகாரமில்லாதிருத்தலாலும் தான் மாயையில் ஜடத்வம் இருப்பதால் பரமாத்ம நிலை பொருந்தே பொருந்தாது.

(41)

तस्मादेतत्त्रयंमिथ्या तदर्थो नेश्वरो भवेत् ।
इति जीवेश्वरौ भातः स्वाज्ञानान्नहि वस्तुतः ॥

தஸ்மாதேதத் த்ரயம் மித்யா ததர்தோ நேச்வரோபவேத் ।
இதிஜீவேச்வரௌபாத: ஸ்வாஜ்ஞாநாத் நஹிவஸ்துத: ॥

ஆகவே, இந்த மூன்றும் உருப்பெறாதது. அம்மூன்றின் பொருளாக ஆத்மாவை கொள்ள முடியாது. அஜ்ஞானம் காரணமாக ஜீவாத்ம - பரமாத்ம தத்வத்தை அறிய முடியவில்லை.

(42)

घटाकाशमठाकाशौ महाकाशे प्रकल्पितौ ।
एवं मयि चिदाकाशे जीवेशौ परिकल्पितौ ॥

கடாகாசமடாகாசௌ மஹாகாசே ப்ரகல்பிதௌ ।
ஏவம் மயிசிதாகாசே ஜீவேசௌ பரிகல்பிதௌ ॥

மஹாகாசத்தில், கடாகாசமும், மடாகாசமும் கற்பனையாக ஏற்கப்படுவது போல் சித் - ஆகாசத்தில் - ஆத்மாவில் ஜீவாத்ம பரமாத்மாக்கள் கற்பிக்கப்படுகின்றன.

(43)

मायातत्कार्यविलये नेश्वरत्वं न जीवता ।
ततः शुद्धचिदेवाहं चिद्व्योमनिरुपाधितः ॥

மாயா - தத்கார்யவிலயே நேச்வரத்வம் ந ஜீவதா ।
தத: சுத்தசிதேவாஹம் சித்வ்யோம நிருபாதித: ॥

மாயையும் அதன் செயலும் அழியும்பொழுது பரமாத்ம ஜீவாத்ம பேச்சு இல்லை. அப்பொழுது சுத்த சித்தாகவே ஆத்மா பரிணமிக்கிறது. அல்லது உபாதி ஏதுமில்லாத சித் ஆகாசமாகவும் ஆகிறது.

(44)

सत्यचित्घनमनन्तमद्वयं
सर्वदृश्यरहितं निरामयम् ।
यत्पदं विमलमद्वयं शिवं
तत्सदाऽहमिति मौनमाश्रये ॥

ஸத்யசித்கன மநந்தமத்வயம்
ஸர்வத்ருச்யரஹிதம் நிராமயம் ।
யத்பதம் விமலமத்வயம் சிவம்
தத்ஸதா஽ஹமிதி மௌளமாச்ரயே ॥

ஸத்ய ஞானப்பிழம்பாய் இருக்கும் அளவு கடந்த ஒன்றேயான அனைத்து காட்சிப் பொருளுமில்லாத ஒரு இடம் இருக்குமானால் அதுவே ஆத்மா எனப்படும் இடம் என்பதால் மௌனம் கொள்கிறேன்.

(45)

पूर्णमद्वयमखण्डचेतनं
विश्वभेदकलनादिवर्जितम् ।
अद्वितीयपरसंविदंशकं
तत्सदाऽहमिति मौनमाश्रये ॥

பூர்ணமத்வய மகண்டசேதநம்
விச்வபேதகல நாதிவர்ஜிதம் ।
அத்விதீய பலஸம்விதம்சகம்
தத்ஸதா஽ஹமிதி மௌனமாச்ரயே ॥

நிரம்பிய ஒரே முழு ஜ்ஞானமாய், உலகிய வேற்றுமையற்றதாய், பேரறிவுப் பகுதியாய் மிளிரும் அதே அந்த ஆத்மாவாக இருப்பதால் மௌனம் கொள்கிறேன்.

(46)

जन्ममृत्युसुखदुःखवर्जितं
जातिनीतिकुलगोत्रदूरगम् ।
चिद्विवर्तजगतोऽस्य कारणं
तत्सदाऽहमिति मौनमाश्रये ॥

ஜன்மம்ருத்யு ஸுகது:க வர்ஜிதம்
ஜாதிநீதி குலகோத்ரதூரகம் ।
சித்விவர்தஜகதோSஸ்ய காரணம்
தத்ஸதாSஹமிதி மௌனமாச்ரய ॥

பிறப்பு, இறப்பு, ஸுகம், துக்கம் இல்லாததும், ஜாதி, நீதி, குலம், கோத்ரம் இவைக்கு அப்பாற்பட்டதும், அறிவுச்சுழலாக அமைந்த உலகிற்கு காரணமாயுள்ளதே அந்த ஆத்மாதான் என்பதால் மௌனம் கொள்கிறேன்.

(47)

उलूकस्य यथा भानावन्धकारः प्रतीयते ।
स्वप्रकाशे परानन्दे तमो मूढस्य भासते ॥

உலூகஸ்ய யதா பானாவந்தகார: ப்ரதீயதே ।
ஸ்வப்ரகாசே பரானந்தே தமோ மூடஸ்ய பாஸதே ॥

சூர்யன் தோன்றியதும் ஆந்தைக்கு (கண் தெரியாததால்) இருள் தெரிவதுபோல், பேரானந்தப் பேரொளி தோன்றியும் மூடனுக்குத் தெரிவது அஜ்ஞானம்தானே!

(48)

यथा दृष्टिनिरोधार्तः सूर्यो नास्तीतिमन्यते ।
तथाऽज्ञानावृतोदेही ब्रह्म नास्तीति मन्यते ॥

யதாத்ருஷ்டி நிரோதார்த: ஸூர்யோ நாஸ்தீதிமன்யதே ।
ததாSஜ்ஞானா வ்ருதோ தேஹீ ப்ரஹ்ம நாஸ்தீதி
மன்யதே ॥

கண்பார்வை தடைபட்டவன் 'சூர்யன் இல்லை' என்று எண்ணுவது போல் அஜ்ஞானத்தால் மறைவுபட்ட ஜீவன் ப்ரஹ்மம் இல்லை என எண்ணலாம்.

(49)

यथाऽमृतं विषाद्भिन्नं विषदोषैर्न लिप्यते ।
न स्पृशामि जडाद्भिन्नो जडदोषान्प्रकाशयेत् ॥

யதாऽம்ருதம் விஷாத்பிந்நம் விஷதோஷைர் ந லிப்யதே।
ந ஸ்ப்ருசாமி ஜடாத்பிந்நோ ஜடதோஷான் ப்ரகாசயன் ॥

விஷத்தினின்று வேறுபட்ட அம்ருதம் விஷ தோஷங்காளல் கலக்கப்படுவதில்லை. அதுபோல் ஜடத்தினின்று வேறுபட்ட ஆத்மா ஜடதோஷங்களை ஊரறியச் செய்வது அன்றி அவற்றுடன் ஸம்பந்தப்படுவதில்லை.

(50)

स्वल्पाऽपि दीपकणिका बहुलं नाशयेत्तमः ।
स्वल्पोऽपि बोधो महतीमविद्यां शमयेत्तथा ॥

ஸ்வல்பாऽபி தீபகணிகா பஹுலம் நாசயேத்தம: ।
ஸ்வல்போऽபி போதோ மஹதீமவித்யாம் சமயேத்ததா ॥

மிகச்சிறியதாயினும் விளக்குச் சுடர் பெரும் இருட்டைப் போக்கி விடுவதுபோல் கொஞ்சமேனும் அறிவு பெரிய அவித்யையை அகற்றி விடும்.

(51)

चिद्रूपत्वान्न मे जाड्यं सत्यत्वान्नानृतं मम ।
आनन्दत्वान्न मे दुःखमज्ञाना द्भवति त्रयम् ॥

சித்ரூபத்வாத் நமே ஜாட்யம் ஸத்யத்வாத் நாந்ருதம் மம।
ஆனந்தத்வாத் நமே து: கம் அஜ்ஞாநாத்பாதி தத்த்ரயம் ॥

பேறறிவு வடிவமானதால் ஆத்மாவுக்கு ஜாட்யம் இல்லை; உண்மையானதால் பொய் என்பதில்லை. ஆனந்தமேயானதால் துன்பமும் இல்லை. ஆனால் இம்மூன்றும் இருப்பது போல் அஜ்ஞானத்தால் தோன்றும்.

(52)

कालत्रये यथा सर्पो रज्जौ नास्ति तथा मयि ।
अहङ्कारादि देहान्तं जगन्नास्त्यहमद्वयः ॥

காலத்ரயேऽபியதா ஸர்போ ரஜ்ஜௌ நாஸ்தி ததாமயி ।
அஹங்காராதி தேஹாந்தம் ஜகந்நாஸ்தி அஹமத்வய: ॥

கயிற்றில் முக்காலத்திலும் ஸர்பம் இல்லைதான். அதே போல் அஹங்காரம் முதல் தேஹம்வரையிலான உலகத் தோற்றம் இல்லையாதலால் ஆத்மா ஒன்றே ஸத்யம்.

(53)

भानौ तमः प्रकाशत्वं नाङ्गीकुर्वन्ति सज्जनाः ।
तमस्तत्कार्यसाक्षीति भ्रान्तबुद्धिरहो मयि ॥

பானௌ தம: ப்ரகாசத்வம் நாங்கீ குர்வந்தி ஸஜ்ஜநா: ।
தமஸ்தத்கார்ய ஸாக்ஷீதி ப்ராந்தபுத்திரஹோமயி ॥

சூர்யன் இருளை, (குடத்தை வெளி உலகுக்கு ப்ரகாசப்படுத்துவதுபோல்) பிரகாசப்படுத்துகிறான் என்று நல்லவர் எவரும் ஏற்கமாட்டார். அதுபோல் இருளுக்கும் அஜ்ஞானத்திற்கும்) அதன் கார்யத்திற்கும் சாக்ஷியாய் இருப்பது ஆத்மா என்று கூறுவது பைத்யக்காரத்தனமே.

(54)

यथा शीतं जलं वह्निसम्बन्धादुष्णवद्भवेत् ।
बुद्धितादात्म्यसम्बन्धात्कर्तृत्वं वस्तुतो न हि ॥

யதாசீதம் ஜலம் வஹ்நிஸம்பந்தாத் உஷ்ணவத்பவேத் ।
புத்திதாதாத்ம்ய ஸம்பந்தாத் கர்த்ருத்வம் வஸ்துதோ நஹி॥

குளிர்ந்த ஜலம் தீ ஸம்பந்தம் ஏற்பட்ட பொழுது உஷ்ணமாவது போல் தோன்றினாலும் உண்மையில் இல்லையே, அதுபோல் புத்தியுடன் இணைந்துள்ளதால் மட்டுமே ஆத்மா கர்தாவாகி விட்டது என்பது உண்மையில் இல்லை.

(55)

जलबिन्दुभिराकाशं न सिक्तं न च शुद्ध्यति ।
तथा गङ्गाजलेनाहं न शुद्धो नित्यशुद्धतः ॥

ஜலபிந்துபிராகாசம் நஸிக்தம் ந ச சுத்யதி ।
ததா கங்காஜலேநாஹம் ந சுத்தோ நித்ய சுத்தத: ॥

ஆகாசம் ஜலத்துளிகளால் நனையவுமில்லை, சுத்தமாயிற்று என்பதுமில்லை. அதுபோல் ஆத்மா நித்ய சுத்தமாய் இருப்பதால் கங்காஜலத்தால் சுத்தமாயிற்று என்பதில்லை.

(56)

वृक्षोत्पन्नफलैर्वृक्षो यथा तृप्तिं न गच्छति ।
मय्यध्यस्तान्नपानाद्यैस्तथातृप्तिर्न विद्यते ॥

வ்ருக்ஷோத்பன்னபலை: வ்ருக்ஷோயதா த்ருப்திம் ந கச்சதி ।
மயி அத்யஸ்தாந்ந பாநாத்யை: ததா த்ருப்தி: நவித்யதே॥

ஒரு மரத்தில் உண்டான பழங்களால் அந்த மரம் திருப்தி கொள்வதில்லை. அதுபோல் ஆத்மாவில் வலிந்து கொள்ளப்பட்ட உணவு உட்கொள்ளுதல், தண்ணீர் பருகுதல் - இவற்றால் அதற்கு திருப்தி இல்லை.

(57)

स्थाणौ प्रकल्पितश्चोरः स स्थाणुत्वं न बाधते ।
स्वस्मिन्कल्पितजीवश्च बाधितुं स्वं न शक्यते ॥

ஸ்தாணௌ ப்ரகல்பிதஸ்சோர: ஸ ஸ்தாணுத்வம் ந பாததே ।
ஸ்வஸ்மின் கல்பித ஜீவஸ்ச பாதிதும் ஸ்வம் நசக்யதே ॥

தூணில் கற்பனையாக எண்ணப்பட்ட திருடன் (திருடனோ என்ற எண்ணம்) தூணின் தன்மையை குலைப்பதில்லை. அதுபோல் ஆத்மாவில் கற்பிதமான ஜீவத்வம் ஆத்மாவை பாதிக்க முடியாது.

(58)

अज्ञाने बुद्धिविलये निद्रा सा भण्यते बुधैः ।
विलीनाज्ञान तत्कार्ये मयि निद्रा कथं भवेत् ॥

அஜ்ஞானே புத்திவிலயே நித்ரா ஸா பண்யதே புதை: ।
விலீநா ஜ்ஞானதத்கார்யே மயி நித்ரா கதம் பவேத் ॥

அஜ்ஞானத்தில் புத்தி லயிக்கும்பொழுது அந்த நிலையை நித்ரை என்பார்கள். ஆனால், அஜ்ஞானமும் அதன் கார்யமும் ஒடுங்கிய பின் ஆத்மாவில் நித்ரை ஏற்பட ஹேது இல்லை.

(59)

बुद्धेः पूर्णविकासोऽयं जागरः परिकीर्त्यते ।
विकारादिविहीनत्वाज्जागरो मे न विद्यते ॥

புத்தே: பூர்ணவிகாஸோऽயம் ஜாகர: பரிகீர்த்யதே ।
விகாராதி விஹீநத்வாத் ஜாகரோ மே ந வித்யதே ॥

புத்தியின் முழு மலர்ச்சியே ஜாக்ரத் அவஸ்தை எனப்படுகிறது. விகாரம் ஏதுமே இல்லாததால் ஆத்மாவுக்கு ஜாக்ரத் என்ற நிலை இல்லை.

(60)

सूक्ष्मनाडीषु सञ्चारो बुद्धेः स्वप्नः प्रजायते ।
सञ्चारधर्मरहिते स्वप्नोनास्ति तथा मयि ॥

ஸூக்ஷ்ம நாடீஷு ஸஞ்சாரோ புத்தே: ஸ்வப்ன:
ப்ரஜாயதே ।
ஸஞ்சார தர்மரஹிதே ஸ்வப்நோ நாஸ்தி ததா மயி ॥

புத்திர ஸூக்ஷ்ம நாடியில் சஞ்சரிக்கும்பொழுது ஸ்வப்னம் என்று கூறப்படுகிறது. ஸஞ்சார தர்மம் இல்லாத ஆத்மாவில் ஸ்வப்னம் உண்டாக வழியில்லை.

(61)

परिपूर्णस्य नित्यस्य शुद्धस्य ज्योतिषो मम।
आगन्तुकमलाभावात्किं स्नानेन प्रयोजनम् ॥

பரிபூர்ணஸ்ய நித்யஸ்ய் சுத்தஸ்ய ஜ்யோதிஷோ மம।
ஆகந்துகமலாபாவாத் கிம் ஸ் நாநேந ப்ரயோஜநம் ॥

பரிபூர்ணமாயும், நித்யமாயும், சுத்தமாயும், ஒளிமயமாயும் இருக்கிற ஆத்மாவுக்கு வெளியிலிருந்து வரும் அசுசி ஏதும் இல்லாததால் ஸ்நாநம் தேவை இல்லை.

(62)

देशाभावात् क्व गन्तव्यं स्थानाभावात् क्व वा स्थितिः।
पूर्णे मयि स्थानदेशौ कल्पितावहमद्वयः ॥

தேசாபாவாத் க்வ கந்தவ்யம் ஸ்தாநாபாவத் க்வ வாஸ்திதி:।
பூர்ணே மயி ஸ்தானதேசௌ கல்பிதாவஹமத்வய: ॥

ஆத்மா என்றளவில் தேசம் ஏதும் இல்லையாதலால் போக வேண்டிய இடமும், குறிப்பிட்ட இடம் ஏதுமில்லாததால் நிலையான இடமும் இல்லை. ஆத்மா பூர்ணமானமானதால் ஸ்தானமும் தேசமும் கற்பனையாகவே கொள்ள வேண்டும். ஆத்மா ஒன்றே என்பதும் தெளிவு.

(63)

प्राणसञ्चारसंशोषात्पिपासा जायते खलु।
शोषणानर्हचिद्रूपे मय्येषा जायते कथम् ॥

ப்ராண ஸஞ்சாரஸம்சோ ஷாத் பிபாஸா ஜாயதே கலு।
சோஷணா நர்ஹசித்ரூபே மய்யேஷா ஜாயதேகதம் ॥

ப்ராண வாயு சஞ்சரித்தலால் ஏற்படும் வெப்பத்தால் தாகம் ஏற்படுவது வழக்கம். அவ்வித வெப்பத்திற்கு வாய்ப்பில்லாத சித் வடிவமான ஆத்மாவில் தாகம் எவ்வாறு உண்டாக முடியும்?

(64)

नाडीषु पीड्यमानेषु वाय्वग्निभ्यां भवेत् क्षुधा।
तयो:पीडनहेतुत्वं संविद्रूपे कथं मयि ॥

நாடீஷு பீட்யமா நாஸு வாய்வக்னிப்யாம் பவேத் க்ஷுதா।
தயோ: பீடநஹேதுத்வம் ஸம்வித்ரூபே கதம் மயி ॥

நாடிகள் ஒன்றுக்கொன்று புடைத்து தொந்தரவுக் குள்ளாகும் பொழுது, வாயு - அக்னி இவற்றின் மூலம் பசி தோன்றுகிறது. வாயு - அக்னி இவற்றின் தொந்தரவு பேரறிவுமயமான ஆத்மாவில் உண்டாக காரணமில்லை. ஆகவே பசி இல்லை.

(65)

शरीरस्थितिशैथिल्यं श्वेतलोमसमन्वितम्।
जरा भवति सा नास्ति निरंशे मयि सर्वगे ॥

சரீர ஸ்திதி சைதில்யம் ச்வேத லோம ஸமன்விதம்।
ஜராபவதி ஸா நாஸ்திநிரம்சே மயிஸர்வகே ॥

முதுமை (ஜரா) என்பது, உடல் தள்ளாடி, வெளிர் உரோமங்கள் தோன்றும் நிலைதான். அதுவும் ஆத்மாவுக்கு இல்லை. ஏனெனில் அது எல்லா இடத்தும் பரவி இருப்பதாலும், பகுதியாக இல்லாததாலும் முதுமைக்கு இடம் இல்லை.

(66)

योषित्क्रीडासुखस्यान्तर्गर्वाढ्यं यौवनं किल।
आत्मानन्दे परे पूर्णे मयि नास्ति हि यौवनम् ॥

யோஷித்க் ரீடாஸுகஸ்யாந்த: கர்வாட்யம் யௌவநம்கில।
ஆத்மானந்தே பரே பூர்ணே மயி நாஸ்தி ஹியௌவனம்॥

மனதில் கர்வம் மேலிட்ட இளம் வயதுதானே, பெண்களை மணந்து, களித்து மகிழ்வதற்கு காரணம். அந்த இளம் வயது ஆத்மாவுக்கு இல்லை. ஏனெனில் பரமான ஆத்மானந்தம் நிரம்பியுள்ளதால் வேறு எந்த சுகத்திற்கும் அங்கு இடம் இல்லை.

(67)

मूढबुद्धिपरिव्याप्तं दुःखानामालयं सदा ।
बाल्यं कोपनशीलान्तं न मे सुखजलाम्बुधेः ॥

மூட புத்தி பரிவ்யாப்தம் து: காநாமாலயம் ஸதா।
பால்யம் கோபந சீலாந்தம் நமே ஸுகஜலாம்புதே:॥

மூட புத்திக்கிடமாயும், துன்பங்களுக்கு இலக்கானதும் கோபத்தை காட்டுவதுமான பால்யப் பருவம் ஆத்மாவுக்கு இல்லை. ஏனெனில் அது ஆனந்த வெள்ளக் கடலாயிற்றே!

(68)

एवं तत्त्वविचाराब्धौ निमग्नानां सदा नृणाम् ।
परमाद्वैतविज्ञानमपरोक्षं न संशयः ॥

ஏவம் தத்வவிசாராப்தெள திமக்நாநாம் ஸதா ந்ருணாம்।
பரமாத்வைத விஜ்ஞான மபரோக்ஷம் ந ஸம்சய:॥

இவ்வாறு தத்வ விசாரமாகிய கடலில் மூழ்கிய மக்களுக்கு எப்பொழுதும் சீரிய அத்வைத விஜ்ஞானம் கண்களுக்கு அப்பாற்றபட்டதன்று. இது உண்மை. சந்தேகமில்லை.

ஸ்வாத்மபிரகாசிகை முற்றுப் பெறுகிறது

